# குர்வஷ்டகம்

(குருவைப்பற்றிய எட்டுப் பதிகங்கள்)

**சரீரம் ஸுரூப1ம் ஸதா3 ரோக3முக்த1ம்**
**யசஸ்சா1ரு சி1த்ரம் த4னம் மேருது1ல்யம் ।**
**மனஸ்சே1ந்ந லக்3னம் கு2ரோரங்க்4ரி ப1த்3மே**
**த1த1: கி1ம் த1த1: கி1ம் த1த1: கி1ம் த1த1: கி1ம் ॥** 1

மிக அழகிய உடலும், ஒருபொழுதும் நோயின்மையும், பலவகையிலும் இனிய புகழும், மேருமலைக்கு இணையான செல்வமும் இருந்தாலும், குருவின் திருவடித்தாமரைகளில் மனம் குவியவில்லையென்றால் என்ன பயன்? என்ன பயன்? என்ன பயன்? என்ன பயன்?

**க1லத்1ரம் த4னம் பு1த்1ர பௌ1த்1ராதி3 ஸர்வம்**
**க்3ருஹம் பா3ந்த4வா: ஸர்வம் ஏத1த்தி4 ஜா1த1ம் ।**
**மனஸ்சே1ந்ந லக்3னம் கு2ரோரங்க்4ரி ப1த்3மே**
**த1த1: கி1ம் த1த1: கி1ம் த1த1: கி1ம் த1த1: கி1ம் ॥** 2

மனைவியும், செல்வமும், பிள்ளையும், பேரன் முதலிய எல்லாமும், வீடும், சுற்றமுமென்ற இத்தனையும் கூடியிருந்தும் குருவின் திருவடித்தாமரைகளில் மனம் குவியவில்லையென்றால் என்ன பயன்? என்ன பயன்? என்ன பயன்? என்ன பயன்?

**ஷட3ங்கா3தி வேதோ3முகே2 சாஸ்1த்ர வித்3யா***
**க1வித்1வாதி3 க3த்3யம் ஸுபத்1யம் க1ரோதி1 ।**
**மனஸ்சே1ந்ந லக்3னம் கு2ரோரங்க்4ரி ப1த்3மே**
**த1த1: கி1ம் த1த1: கி1ம் த1த1: கி1ம் த1த1: கி1ம் ॥** 3

ஆறு அங்கங்களோடு கூடிய வேதம், சாஸ்திரம், வித்யை* முதலியவை வாக்கிலிருந்தாலும், பாட்டும், உரைநடையும் படைக்கும் கவித்திறன் இருந்தாலும், குருவின் திருவடித்தாமரைகளில் மனம் குவியவில்லையென்றால் என்ன பயன்? என்ன பயன்? என்ன பயன்? என்ன பயன்?

[* ரிக், யஜுஸ், ஸாமம், அதர்வம் என்று வேதங்கள் நான்கு. சிக்ஷை, வ்யாகரணம், சந்தஸ், நிருக்தம், ஜ்யோதிஷம், கல்பம் என்பவை அவற்றின் அங்கங்கள். மீமாம்ஸா, நியாயம், புராணம், தர்ம சாஸ்திரம் என்பவை உபாங்கங்கள். இவை பதினான்கும் 'வித்யா ஸ்தானம்' எனறு சொல்லப்படும்.]

**விதே3சேஷு மான்ய: ஸ்வதே3சேஷு த4ன்ய:**
**ஸதா3சா1ரவ்ரு1த்தே1ஷு மத்1தோ1 ந சா1ன்ய: ।**

**மனஸ்சே1ந்ந லக்3னம் கு2ரோரங்க்4ரி ப1த்3மே**
**த1த1: கி1ம் த1த1: கி1ம் த1த1: கி1ம் த1த1: கி1ம் ||** 4

தன் நாட்டில் புகழப்பெற்றாலும், பிற நாடுகளில் மதிக்கப்பெற்றாலும், நற்பணி நன்னடத்தைகளில் பற்றுக்கொண்டு பிறவற்றை ஒதுக்கினாலும், குருவினது திருவடித்தாமரைகளில் மனம் குவியவில்லையென்றால் என்ன பயன்? என்ன பயன்? என்ன பயன்? என்ன பயன்?

**க்ஷமாமண்ட3லே பூ4ப1பூ4பா1ல வ்ருந்தை3:**
**ஸதா3ஸேவித1ம் யஸ்ய பா1தா3ரவிந்த3ம் |**
**மனஸ்சே1ந்ந லக்3னம் கு2ரோரங்க்4ரி ப1த்3மே**
**த1த1: கி1ம் த1த1: கி1ம் த1த1: கி1ம் த1த1: கி1ம் ||** 5

ஒருவனுடிய பாதத்தாமரைகள் பூமண்டலத்தில் உள்ள மன்னர்களாலும், பேரசர்களாலும் எப்பொழுதும் வணங்கப்பட்டாலும், குருவினுடைய திருவடித் தாமரைகளில் (அவனது) மனம் குவியவில்லையென்றால் என்ன பயன்? என்ன பயன்? என்ன பயன்? என்ன பயன்?

**யசஸ்சே1த் க3த1ம் தி3க்ஷு தா3னப்ரதா1பாத்**
**ஜ3க3த்3வஸ்து1 ஸர்வம் க1ரே யத்1 ப்ரஸாதா3த் |**
**மனஸ்சே1ந்ந லக்3னம் கு2ரோரங்க்4ரி ப1த்3மே**
**த1த1: கி1ம் த1த1: கி1ம் த1த1: கி1ம் த1த1: கி1ம் ||** 6

கொடையின் சிறப்பால் திக்கெட்டும் புகழ் பரவியிருந்தாலும், எவருடைய அருளினால் உலகத்துப் பொருள் அனைத்தும் கைவருமோ, அந்தக் குருவினுடைய திருவடித்தாமரையில் மனம் குவியவில்லையென்றால் என்ன பயன்? என்ன பயன்? என்ன பயன்? என்ன பயன்?

**ந போ4கே3 ந யோகே3 ந வா வாஜி3மேதே4**
**ந கா1ந்தா1ஸுகே2நைவ வித்1தே1 ஷுசித்1த1ம் |**
**மனஸ்சே1ந்ந லக்3னம் கு2ரோரங்க்4ரி ப1த்3மே**
**த1த1: கி1ம் த1த1: கி1ம் த1த1: கி1ம் த1த1: கி1ம் ||** 7

போகத்தில், யோகத்தில், அச்வமேத யாகத்தில், காதலியின் இன்பத்தில், செல்வத்தில் கருத்தைச் செலுத்தாவிட்டாலும், குருவின் திருவடித்தாமரைகளில் மனம் குவியவில்லையென்றால் என்ன பயன்? என்ன பயன்? என்ன பயன்? என்ன பயன்?

**அரண்யே ந வா ஸ்வஸ்ய கே3ஹே ந கா1ர்யே**
**ந தே3ஹே மனோ வர்த்1த1தே1 மே த்1வனர்க்4யே |**
**மனஸ்சே1ந்ந லக்3னம் கு2ரோரங்க்4ரி ப1த்3மே**
**த1த1: கி1ம் த1த1: கி1ம் த1த1: கி1ம் த1த1: கி1ம் ||** 8

காட்டிலோ, சொந்த வீட்டிலோ, செய்ய வேண்டிய கடமையிலோ, உடலிலோ, உயர்ந்த வேறு எதிலுமோ என் மனம் ஈடுபடவில்லை. எனினும், குருவின் திருவடித்தாமரைகளில் மனம் குவியவில்லையென்றால் என்ன பயன்? என்ன பயன்? என்ன பயன்? என்ன பயன்?

**கு3ரோ ரஷ்ட1க1ம் ய: ப4டே2த் புண்யதே3ஹீ**
**யதி1ர் பூ4ப1தி1ர் ப்3ரஹ்மசா1ரீ ச1 கே3ஹீ |**
**ல்பே4த் வாஞ்சி2தா1ர்த்த2ம் ப1த3ம் ப்3ரஹ்மஸம்ஜ்ஞும்**
**கு3ரோருக்1த2வாக்1யே மனோ யஸ்ய லக்3னம் ||** 9

பிரம்மசாரியோ, இல்லறத்தானோ, துறவியோ, அரசனோ, புண்ணியசாலியான எவன் ஒருவன் குர்வஷ்டகத்தைப் படிக்கிறானோ, குருவினால் கூறப்பட்ட வாக்கில் எவனுடைய மனம் குவிகிறதோ, அவன் விரும்பப்படும் பெரும்பேறாகிய பிரம்மம் என்று பெயர் பெற்ற பதவியை அடைகிறான்.

---

